15th December 1961]

விடப்பட்டுதான் வருகிறது. மின்சார சப்ளை பாதிக்காத அளவில் எவ்வளவு தண்ணீர் விடவேண்டுமோ அந்த அளவில் விடப்பட்டு தான் வருகிறது.

*Co-operative farms for Harijans*

* 2416. *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஹரிஜன் பின்தங்கிய வகுப்பினர்களுக்கென்று தனியாக அல்லது கூட்டாக கூட்டுப் பண்ணைகள் எங்கெங்கே ஆரம்பிக்கப் பட்டுள்ளன ?

THE HON. SRI P. KAKKAN : A statement [a] is placed on the table of the House.

*Sale of Cement by private individuals*

* 2417 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா —

தனி நபர்களுக்கு சிமெண்ட் விற்பனை செய்யும் அனுமதி கொடுப்பதை ரத்து செய்து, கூட்டுறவு சங்கங்கள் மூலமாக விற்பனை செய்யும் முறையை அமுலில் கொண்டுவர உத்தேச முண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No. Sir, However necessary instructions have been given to the selling agents of State Trading corporation to give preference to Co-operatives while replacing or appointing Cement stockists. Two Co-operative Societies, one in Thanjavur districts and the other in Ramanathapuram district have been appointed as stockists.

*Teacher's training*

* 2418 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 1958 முதல் 1961 வரை திருச்சி ஜில்லாவில் தமிழ் ஆசிரியர்கள், உடற்பயிற்சி ஆசிரியர்கள் தேர்வு பெற்றவர்கள் எத்தனை பேர் ?

(இ) அதில் எத்தனை பேர்களுக்கு வேலை கொடுத்தாகி விட்டது ?

(உ) மீதம் உள்ளவர்களின் எண்ணிக்கை என்ன ?

(எ) முறையாக வேலை கொடுக்கப்படுகிறதா ?

(ஐ) முறைதவறி நடந்திருந்தால் முறையுடன் நடத்து வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ ) to (ஐ) Particulars have been called for from the Director of Public Instruction. A statement will be placed on the table of the House.

---

a Printed as Appendix XV on page 1113 infra.

[15th December 1961

**SRI S. RAMALINGA PADAYACHI:** ஸார், இந்த தமிழ் ஆசிரியர்களைப் போலவே, உடல் பயிற்சி ஆசிரியர்களும் 1958, 1959, 1960 ஆண்டுகளில் பயிற்சி பெற்றவர்களில் எத்தனை பேர்கள் வேலை கொடுக்கும் ஸ்தாபனத்தில் விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவர்களில் எத்தனை பேர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டன? 1961-ல் தேர்வு பெற்றவர்களும் விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். முதலில் விண்ணப்பித்தவர்களுக்கு வேலை கொடுக்காமல் 1961-ல் விண்ணப்பித்தவர்களுக்கு வேலை கொடுத்திருக்கிறார்கள். இதன் காரணம் என்ன? விண்ணப்பித்த முறையில் வேலை கொடுக்கவேண்டும் என்று இந்த அரசாங்கம் அவர்களுக்கு சிபாரிசு செய்வார்களா? முதலில் விண்ணப்பித்துக் கொண்டவர்களுக்கு வேலை கொடுக்காமல் பிற்பட்டு விண்ணப்பித்தவர்களுக்கு வேலை கொடுத்திருக்கிறார்களே, அதைப்பற்றி இந்த அரசாங்கம் கவனிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இதைப்பற்றி (Director of Public Instruction)-ஐ கேட்கப்பட்டிருக்கிறது. அவரிடமிருந்து தகவல் வந்த பிறகுதான் இதற்கு பதில் சொல்ல முடியும்.

*Forest produce (Industries)*

* 2420. *Q.*—**SRI S. M. ANNAMALAI:** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காடுகளில் உற்பத்தியாகும் பொருள்களைக்கொண்டு சிறு தொழில்கள் ஆரம்பிக்க சர்வே செய்யும் உத்தேசம் உண்டா?

(இ) அப்படியாயின், அதற்காக இதுவரை எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை?

**TKE HON. SRI M. BHAKTAVATSALAM:** (அ) & (இ) With a view to utilise the timber available in the forests of this State, the Government have sanctioned the following schemes during the Second Five-Year Plan—

(1) Wood Working-*cum*-Wood Seasoning Plant, Guindy.

(2) Wood Seasoning Plant, Pollachi.

(3) Saw Mill Section in the Model Combined Carpentry and Blacksmithy Workshop, Pettai.

A scheme for the establishment of Wood Seasoning and Wood Working Unit with Saw Mill at Kargudi in the Nilgiris district at a cost of Rs. 5,10,000 non-recurring and Rs. 3,85,700 recurring has also been sanctioned by the Government, for implementation during the Third Plan period. This Government have, however, no separate proposal to conduct a survey to start small-scale industrial units with the produce available in the forests other than timber.

**SRI S. M. ANNAMALAI:** காடுகளில் மணிபுங்கன், கடுக்காய் கிடைக்கின்றனவே, அவைகளைக் கொண்டு சிறு கைத்தொழில்களை ஆரம்பிப்பது பற்றி சர்க்கார் பரிசீலனை செய்யுமா?